உ

சிவமயம்.




# குணமங்கல விநாயகர் பதிகம்.



இது

குணமங்கலம் மணியம்

மகா-ள-ள-ஸ்ரீ

பெரியபெருமாள்பிள்ளை அவர்கள்

விருப்பத்தின்படி

விழுப்புரம் சின்னமடம்

க. சி. முருகேசமுதலியாரால்

இயற்றி,

---

சிதம்பரம்

விநாயகசுந்தரவிலாசம்பிரஸில்

அச்சிடப்பட்டது.

25—5—1911.





உ

கடவுள் துணை.

# குணமங்கல விநாயகர் பதிகம்.

---

காப்பு. (வெண்பா)

ஓங்கார மூலத் தொளிர்சுடரே உத்தமர்பால்
நீங்காது வாழு நிருமலனே—பாங்கார்
குணமங் கலமுறையுங் குஞ்சரமே நாயே
னெணுமங் கலமேற்ற வேல்.

## நூல்.

(எழுசீரடி விருத்தம்.)

பொன்முடிகவிந்தஆனைமாமுகமும்பூணநூல்மதாணிகளை
மைந்து-மின்னொளிபரப்பும்விசாலவொண்மார்பும் விளங்குபா
சாங்கு சங்கனிகோ---டென்னிலவியலங்குதடங்கையுமுதர-மி
டையிருபதமுநான்காண--மன்னவென்னுண்முன்வந்தருள்புரி
வாய்மாக்குணமங்கலவிறையே. [1]

மறையவர்புகழுன்மலரடிவணங்கிமாத்தவம்புரிந்தினிப்பி
றவா-நிறைபெறநினதுதிருவடியடுத்தேனீசடைக்கண்ணரு
ள்புரிகெதன்--குறையதுநீக்கிக்குணம்வருவித்தாள்கோட்டிஞ
ற்கஜமுகற்காய்ந்த-விறைவனேவெள்ளாற்றினதருகோங்குமெ
ழிற்குணமங்கலவிறையே. [2]

நரைதிரைமூப்புச்சாவிளுக்கஞ்சிநல்லமெல்லாந்தவாது
இப்--புரைதவிர்ந்துன்னைப்போற்றியுய்ந்தார்யான்புவிதொறும்
புன்பிறப்பெய்திக்---கரையிலாத்துன்பக்கடலிலாழ்ந்தேனிகரு
ணைவான்றுதிக்கையாற்காவாய்--விரைமலர்ந்தொடையல்குழ
லினிற்புனைவோர்மிகுகுணமங்கலவிறையே. [3]

நதிபலமூழ்கேன்றலந்தொழநணுகேன்நவிலுடலுயிர்பொ
ருணினக்கே-சுதிபெறவீயேன் கவினறஞ்செய்யேன்காரமனை

மாதிபவுடையேன் விதிபெரிதெனினும் விடாமுயல்வசருல்
மேன்மையார்ந்துய்யுமாறருளாய்- மதிமிகவுடையோர்துதிபெ
றுஞ்சுமுகவாருணமங்கலவிறையே. [4]

நித்தியகருமம்நியதிபிற்செய்யும்நேர்மையும்நின்னடிய
வர்பாற்-பத்தியுமயலார்மாதுசோதரமாய்ப்பாவனைபண்ணிமே
ற்படிசேர்--புத்தியும்வேண்டிப்புகலடைந்தேனின்பூங்கருணை
யிற்சிறிதளித்தாள்-.கைத்தலமைந்தார்கடவுளேநல்லோர்க்கரு
ள்மங்கலவிறையே. [5]

பிச்சிபீஸ்வரரைப்பெரியநாயகியைப்பேணுநற்றந்தைதாயா
க்கொண்- டிச்சகம் புரக்குமையன்முப்பளியையெழின்முனி
மாரிதுரோபதையை-மெச்சுமாணிக்கநாச்சியைவிரும்பிமேவி
டச்செய்தெமைக்காத்தாய்-வைச்சபேரருளார்வாரணமுகனே
வயக்குணமங்கலவிறையே. [6]

நின்னைநின்னிளையநெடுங்கைவேலவனைநிகரிலாவிண்டு
வைநேய-அன்னையாமுமையையப்பனைமரனைஆவிசேருடலரு
ளயனைப்--பின்னமாக்கொள்ளேன்பேசருநீயேபிறங்கினையிந்த
வாறென்பேன்-என்னருட்குருவாய்மன்னிவந்தாள்வாய்இருங்
குணமங்கலவிறையே. [7]

ஆதிமேற்றோன்றன்னருட்டிருமேனியடிக்கடி நினைபவு மரிதாம்-போகசாதனைமேற்பலிலவு மடியாருன்னுநற்றொண்டு களியற்றிப்-பாகமேவுறவும்பழக்குலைவுபுனைதுபாதபத்தியினரு க்குதவும்--ஈகையார்சேர்ந்துற்றின்பணிபுரியுமியற்குணமங்கல விறையே. [8]

சீர்வளருநனதுபேர்நினைபாமற்செயுந்தொழில்விக்கினஞ்செ ய்ய - நீர்வளருலகமெங்கணுங்கோவில்நிறைத்தவனேயெனப் போற்றிப்-பேர்வளர்நினதுபுகழ்சிலசாற்றப்பெறுமிநூல்பெட் புறவெணுவாய்--ஏர்வளர்வேளாண்செல்வர்களினிதாவெணுங் குணமங்கலவிறையே. [9]

கூடலையாற்றூர்குளிர்முதுகுன்றங்குவலயத்துதிதிருமுட் டம்- நீடலைமுத்தஞ்சொரியும்வெள்ளாறுநேர்ந்தயல்மன்னமற் றிலை_பே- பீடுசேர்வேளாண்மைக்குரியவராய்ப்பிறங்குநல்லோ ர்தமைக்காக்குந்-தேடரும்பொருளேசெல்வவைங்கரனேதிகழ்

---

குணமங்கலவிறையே. [10]

மணயிஞ்சிபவுணவுங்கனிமதூரந்தினநுகருங்
கணமெங்கணுநிலவும்பொழில்கழகத்தனியிடமும்
பணமும்நவமணியும்பரவெலணநின்றொளிபரவுங்
குணமங்கலமருவுஞ்சிவசுதவைங்கரதருவே. [1]

/

முக்கணாபோற்றியைங்கைமுன்னவாபோற்றிமேனிச்
செக்கர்வானொளியாபோற்றிசிவனுமைசேயேபோற்றி
தக்கவானவரைக்காத்ததம்பியையுடையாய்போற்றி
இக்குணமங்கலத்துக்கிறைவனேபோற்றிபோற்றி. [2]

ஓதருங்கல்விசெல்வமுயர்நடையாதிவாய்ந்து
சீதரன்றன்னைநின்னைத்தினம்பணிமிராசுதாரன்
மாதவக்குப்புசாமிவள்ளல்பேர்மாநிலத்தில்
நீதியோடெந்நாளுநிலைபெறவாழ்கமாதோ. [3]

பெரியபெருமாளெனும்பேர் பெற்றுமணி யஞ்செய்
அரியகுண மங்கலநே யன்சொற்—குரிதாகச்
சொன்னா னொருபதிகந் தூவைங் கரன்மீது
மன்னுமுருகேசன் மகிழ்ந்து. [4]

## வேறு.

இரட்டைக்கணபதியிணையடிபரவில்
அரிட்டமகலும்மவிருநற்புத்தி
இருட்டெனுமாயையேகிமெய்யோகம்
தெருட்டுமெமுதெனச்சேர்வதுதிடமே. [5]

முக்கனியுந் தேனு முதிர்சுவைப்பா லும்மமுதம்
எக்காலு மீயு மெழிலடியார் —புக்கிருந்து
போற்றுங் குணமங் கலவிரட்டைப் போதகத்தைச்
சாற்றினுறு மெந்நலமுந் தான்.

இரத்தின சாமி யினுமறிஞர்க் கென்றும்
அருத்தமுத னான்கு மளிக்குங்—கருத்தார்
இரட்டை விநாயகரை யென்னகமே யேத்தும்
பொருட்டுணை மங்கலநீ போ.

மங்களங்குணமங்கலவாரணர்
மங்களந்தமிழாரியமாமறை
மங்களஞ்சைவவைணவவாகமம்
மங்களம்வையம்வானகமாதியே.

வாழ்கவைதிகசைவம்வைணவம்
வாழ்கநான்மறையாகமமந்தணர்
வாழ்ககோவினம்வானவர்மாதவர்
வாழ்கநற்குணமங்கலவாணனையே.

முற்றிற்று.

---